திரு. க. வீ. அழ. மு. இராமனாதன்
செட்டியார் மகள்

1/3

விசாலாட்சி





தோற்றம் : 2—6—[illegible]   மறைவு : 23—3—48

# சிவ புராணம்

மாணிக்க வாசக சுவாமிகள்

வெளியிட்டோர் :
க. வீ. அழ. மு. இராமனுதன் செட்டியார்
(அன்பு அளிப்பு)

குறிப்பு உரை — ராய. சொ.

# முன் உரை

'சிவ புராணம்' திருவாசகத்தின் முதல் பாட்டு; முழு முதலாகிய சிவபெருமானின் அருட் குணத்தைப் பரவும் முதல்தரமான பாட்டு; தொண்ணூற்று ஐந்து வரிகள் கொண்ட பக்தி பெருகி ஓடும் ஒப்பற்ற பாட்டு.

இதனை ஒரு சிறு நூலாக வெளியிடுகின்றவர், எனது ஆருயிர் அன்பர் – குணங்களால் நிரம்பப் பெற்றவர், க. வீ. அழ. மு. இராமனுதனுர். இந் நூல் வெளியீடு, அவர்தம் அருமை மகள், இளம் வயதில் இவ் உலக வாழ்வு நீத்த நற்குணச் செல்வி விசாலாட்சியின் நினைவு காரணமாகத் தோன்றிய பல அறச் செயல்களுள் ஒன்று.

அன்பர் இராமனுதனுர் நாள் தோறும் இச் சிவ புராணத்தைத் தவருமல் பாராயணம் செய்பவர். தமிழ் அன்பர் பலரும் சிவ புராணத்தை ஓதி உயர வேண்டும் என்பதே அவர்கள் விருப்பம்.

இச் சிவ புராணத்தை அன்பு அளிப்பாகப் பெறும் அன்பர்கள் செய்யும் கைம்மாறு, புத்தகத்தில் உள்ள பாடலை மனத்துள் பதிய வைத்துக் கொள்ளும் ஒன்றே.

காந்தி ஆண்டு 79.
ஆவணி 1

ராய. சொ.




உ

சிவமயம்

# சிவ புராணம்

கலி வெண்பா

நமச்சிவாய வாஅழ்க! நாதன்தாள் வாழ்க!
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க!
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க!
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க!

---

சிவபுராணம் : சிவபெருமானின் பழைமை.

வரி—1. நம : வணக்கம். சிவாய : சிவனுக்கு. நமச்சிவாய வாழ்க என்பதற்கு ‘நம சிவாய’ என்னும், திரு ஐந்து எழுத்து என்றும் நிலைபெறுக என்பதும் பொருள். நாதன் : தலைவன். தாள் : திருவடி.

3. கோகழி : பெருந்துறை. அதாவது ஆவுடையார்கோவில்.

4. ஆகமம் : இறையைப்பற்றிக் கூறும் நூல். அண்ணித்தல் : நெருங்குதல்.

5. ஏகம் : ஒன்று. அநேகம் : பல.

வேகம் கெடுத்துஆண்ட வேந்தன்அடி வெல்க!
பிறப்புஅறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் வெல்க!
புறத்தார்க்குச் சேயோன்தன் பூங்கழல்கள் வெல்க!
கரங்குவிவார் உள்மகிழும் கோன்கழல்கள் வெல்க!
சிரங்குவிவார் ஓங்குவிக்கும் சீரோன் கழல்வெல்க!

ஈசன் அடிபோற்றி! எந்தை அடிபோற்றி!
தேசன் அடிபோற்றி! சிவன்சே வடிபோற்றி!
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி!
மாயப் பிறப்புஅறுக்கும் மன்னன் அடிபோற்றி!
சீரார் பெருந்துறைநம் தேவன் அடிபோற்றி!

---

6. வேகம்: ஒன்றைவிட்டு மற்றொன்றைப் பற்றும் மனத்தின் விரைவு.

7. பிஞ்ஞகன்: தலை அலங்காரம் உடையவன் - சிவபெருமான் இள நிலவு, குளிர் கங்கை முதலியவற்றைத் தலையிலே அழகாகச் சூடியிருக்கின்றான். - "நீரோடு கூவிளமும் நிலா (மதியும்) வெள் எருக்கும் நிறைந்த கொன்றைத் தாரோடு தண்கரந்தை சடைக்கு அணிந்த தத்துவனார்" என்றார் ஞானசம்பந்தப் பிள்ளையார். பெய் கழல்: வீரச் சிலம்பு அணிந்த திருவடி.

8. புறத்தார்: நலத்திற்குப் புறம்பானவர். சேயோன்: தூரத்தே உள்ளவன். பூ கழல்: மலர் போன்ற திருவடி.

9. கரம் குவிவார்: கைகூப்பித் தொழுகின்றவர்.

10. சிரம் குவிவார்: தலை வணங்குபவர். ஓங்குவித்தல்: உயரச் செய்தல்.

11. போற்றி: வணக்கம். எந்தை: எம் தந்தை.

12. தேசன்: ஒளி வடிவினன்.

13. நேயம்: அன்பு. நிமலன்: அழுக்கு அற்றவன்.

14. மாயப் பிறப்பு: நிலையாமையை உடைய பிறவி.

ஆராத இன்பம் அருளுமலை போற்றி!
சிவன்அவன் என் சிந்தையுள் நின்ற அதனால்
அவன்அரு ளாலே அவன்தாள் வணங்கியே
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய உரைப்பன்யான்;

கண்நுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற்கு எட்டா எழிலார் கழல்இறைஞ்சி
விண்நிறைந்து மண்நிறைந்து மிக்காய் விளங்குஒளியாய்
எண்இறந்து எல்லை இலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழும்ஆறு ஒன்றுஅறியேன்;

புல்ஆகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருகம் ஆகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாறு நின்றஇத் தாவர சங்கமத்துள்

---

16. ஆராத : தெவிட்டாத.

20. முந்தை வினை : பழ வினை. ஓய : கெட.

21. கண்நுதலான் : நெற்றிக்கண் படைத்தவன்.

22. எண்ணுதற்கு எட்டா : நினைக்க முடியாத. எழில் : அழகு.

24. எண் இறந்து : அளவுகடந்து.

25. புகழும்ஆறு : சிறப்பித்துச் சொல்லும் வழி.

27. விருகம் : விலங்கு.

28. கணம் : கூட்டம்.

29. அசுரர் : அரக்கர்.

30. தாவரம் : அசையாப் பொருள். சங்கமம் : அசையும் பொருள்.

எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான்!
மெய்யேஉன் பொன்னடிகள் கண்டுஇன்று வீடுற்றேன்!
உய்யஎன் உள்ளத்துள் ஓங்காரம் ஆய்நின்ற
மெய்யா! விமலா! விடைப்பாகா! வேதங்கள்,
"ஐயா!" எனஓங்கி ஆழ்ந்துஅகன்ற நுண்ணியனே!
வெய்யாய்! தணியாய்! இயமானன் ஆம்விமலா!
பொய்யா யினஎல்லாம் போயகல வந்துஅருளி
மெய்ஞ்ஞானம் ஆகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே!
எஞ்ஞானம் இல்லாதேன் இன்பப் பெருமானே!
அஞ்ஞானம் தன்னை அகல்விக்கும் நல்அறிவே!
ஆக்கம் அளவுஇறுதி இல்லாய்! அனைத்துலகும்
ஆக்குவாய்! காப்பாய்! அழிப்பாய்! அருள்தருவாய்!

---

32. மெய்யே: உண்மையாகவே. வீடு: விடுதலை.

34. விமலன்: குற்றம்அற்றவன். விடைப்பாகன்: ஏறு ஊர்ந்த செல்வன்.

35. ஓங்கி ஆழ்ந்து அகன்ற நுண்ணியன்: நீண்டவன்; ஆழமானவன்; அகலம் பெற்றவன்; நுணுக்கம் கொண்டவன்.

36. வெய்யாய்: வெம்மை உடையவனே. தணியாய்: குளிர்ச்சி கொண்டவனே. இயமானன்: உயிர்.

37. போய் அகல: சென்று நீங்க.

38. மெய்ஞ்ஞானம்: உண்மை அறிவு. மிளிர்கின்ற: விளங்குகின்ற. சுடர்: ஒளி

39. எஞ்ஞானம்: எவ்வித அறிவும்.

40. அஞ்ஞானம்: அறியாமை. அகல்வித்தல்: அகன்று ஓடச் செய்தல்.

41. ஆக்கம்: உண்டாதல். அளவு: காலவரையறை. இறுதி: முடிவு.

போக்குவாய் என்னை ; புகுவிப்பாய் நின்தொழும்பின் ;
நாற்றத்தின் நேரியாய்! சேயாய்! நணியானே!
மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே!

கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தால் போலச்
சிறந்துஅடியார் சிந்தனையுள் தேன்ஊறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்!
நிறங்கள்ஓர் ஐந்துடையாய்! விண்ணோர்கள் ஏத்த
மறைந்திருந்தாய் எம்பெருமான்! வல்வினையேன் தன்னை,

மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டிப்
புறந்தோல்போர்த்து எங்கும் புழுஅழுக்கு மூடி
மலம்சோரும் ஒன்பது வாயில் குடிலை
மலங்கப் புலன்ஐந்தும் வஞ்சனையைச் செய்ய,

---

43. போக்குவாய் என்னை : நான் எனது என்பவற்றைப் போகச் செய்வாய். புகுவிப்பாய் நின் தொழும்பில் : உன் தொண்டிலே புகுத்துவாய்.

44. நாற்றத்தின் நேரியாய் : பூவில் மணம் போல அன்பர் உள்ளத்திலே பொருந்தியிருப்பவனே. சேயாய் : அன்பு அற்றவர்க்குத் தூரத்தே இருப்பவனே! சேய்மை : தூரம். நணியானே : அன்பர்க்குக் கிட்ட நெருங்கியவனே. நணிமை : சமீபம்.

45. மாற்றம் : சொல். மனம் : உள்ள நினைவு.

46. கன்னல் : கரும்பு ரசம்.

51. அறம் பாவம் : நல்வினை தீவினை.

54. ஒன்பது வாயில் குடில் : ஒன்பது வழிகளை உடைய உடல்.

55. மலங்க : கலங்க.

விலங்கும் மனத்தால் விமலா ! உனக்குக்
கலந்தஅன்பு ஆகிக் கசிந்துஉள் உருகும்
நலந்தான் இலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காஅட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்

தாயிற் சிறந்த தயாவான தத்துவனே !
மாசற்ற சோதி ! மலர்ந்த மலர்ச்சுடரே !
தேசனே ! தேனார் அமுதே ! சிவபுரனே !
பாசமாம் பற்றுஅறுத்துப் பாரிக்கும் ஆரியனே!
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்

பேராது நின்ற பெருங்கருணைப் பேர்ஆறே!
ஆரா அமுதே ! அளவிலாப் பெம்மானே !
ஓராதார் உள்ளத்து ஒளிக்கும் ஒளியானே !
நீராய் உருக்கிஎன் ஆருயிராய் நின்றானே !
இன்பமும் துன்பமும் இல்லானே ! உள்ளானே !

---

56. விலங்குதல் : விலக்குதல்.

61. தயாவான : அருள் வடிவான.

63. தேசனே : பிரகாசமானவனே. தேன் ஆர் அமுது : தேன் விரவிய அமிழ்தம்.

64. பாரித்தல் : வளரச்செய்தல். ஆரியன் : மேலானவன்.

66. பேராது : நீங்காமல்.

68. ஓராதார் : ஆராய்ச்சியற்றவர். ஒளிக்கும் : மறைந்துகொள்ளும்.

69. நீராய் உருக்கி : நீராக உருகச்செய்து. ஆர் உயிர் : நிறைந்த உயிர்.

அன்பருக்கு அன்பனே ! யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே ! துன்இருளே ! தோன்ருப் பெருமையனே
ஆதியனே ! அந்தம் நடுவாகி அல்லானே !
ஈர்த்துஎன்னை ஆட்கொண்ட எந்தை பெருமானே !
கூர்த்தமெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே ! நுணுக்கரிய நுண்உணர்வே !
போக்கும் வரவும் புணர்வும்இலாப் புண்ணியனே !
காக்கும்எம் காவலனே ! காண்புஅரிய பேர்ஒளியே !
ஆற்றுஇன்ப வெள்ளமே ! அத்தா !மிக் காய்நின்ற
தோற்றச் சுடர்ஒளியாய்ச் சொல்லாத நுண்உணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்துஅறிவாம்
தேற்றனே ! தேற்றத் தெளிவே ! என் சிந்தனையுள்
ஊற்ருன உண்ஆர் அமுதே ! உடையானே !



---

72. துன் இருள் : நிறைந்த இருள்.

73. அந்தம் : இறுதி.

74. ஈர்த்து : இழுத்து.

75. கூர்த்த : கூர்மையான.

77. போக்கு : இறப்பு. வரவு : பிறப்பு. புணர்வு : சேர்ந்து இருத்தல்.

79. அத்தன் : தந்தை.

80. சொல்லாத : சொல்லமுடியாத.

81. மாற்றம் ஆம் வையகம் : மாறுபாடு உடைய உலகம்.

82. தேற்றன் : தெளிவானவன்.

83. உண் ஆர் அமுது : உண்ணத்தக்க நிறைந்த அமிழ்து.

வேற்று விகார விடக்குஉடம்பின் உள்கிடப்ப
ஆற்றேன்எம் ஐயா ! அரனேயோ ! என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டுஇங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பைக் கட்டழிக்க வல்லானே !
நள்இருளில் நட்டம் பயின்றாடும் நாதனே !
தில்லையுள் கூத்தனே ! தென்பாண்டி நாட்டானே !
அல்லல் பிறவி அறுப்பானே ! ஓ என்று
சொல்லற்கு அரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருள்உணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தின் ; உள்ளார் சிவன்அடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

---

84. வேற்று விகாரம் : வேறு வேறு திரிபுகள். விடக்கு : தசை.

85. ஆற்றேன் : தாங்கமாட்டேன். அரனே ! : சிவபெருமானே.

87. மீட்டு : திரும்பவும்.

88. கள்ளப் புலம் : வஞ்சக ஐம்புலன். குரம்பை : உடம்பு. கட்டு அழித்தல் : அடியோடு தொலைத்தல்.

89 நள் இருள் : நடுச் சாமம். நட்டம் : நடனம்.

90. தில்லை : சிதம்பரம். கூத்தன் : ஆடுகின்றவன். தென்பாண்டி நாடு : தமிழ் நாட்டின் தெற்கே உள்ள பாண்டிய நாடு.

91. அல்லல் : துன்பம்.

94, 95. செல்வர் சிவபுரத்தின் : சிவபெருமான் நகரம் செல்வார்கள். பல்லோரும் பணிந்து ஏத்தச் சிவன் அடிக்கீழ் உள்ளார் : பலரும் தாழ்ந்து வணங்கச் சிவபிரான் திருவடி நீழலில் என்றும் இருப்பர்.

பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேன் உடைய
ஊனினை உருக்கி உள்ஒளி பெருக்கி
உலப்புஇலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
செல்வமே! சிவபெரு மானே!
யான்உனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்குஎழுந்து அருளுவது இனியே.

தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னைச்
சங்கரா! ஆர்கொலோ சதுரர்?
அந்தம்ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்,
யாதுநீ பெற்றதுஒன்று என்பால்!
சிந்தையே கோயில் கொண்டஎம் பெருமான்!
திருப்பெருந் துறைஉறை சிவனே!
எந்தையே! ஈசா! உடல்இடம் கொண்டாய்!
யான்இதற்கு இலன்ஓர்கைம் மாறே.

மதராஸ் ரிப்பன் பிரஸ், புதுக்கோட்டை.